[7th September 1960

## (3) ELECTION OF MEMBERS TO THE COMMITTEE ON ESTIMATES.

MR. SPEAKER : I have also to announce to the House that out of the FIFTEEN Members who were nominated to the Committee on Estimates, as a result of the election held on 6th September 1960, the following FOURTEEN Members have been declared duly elected to the Committee on Estimates for the year 1960-61 :—

1 Sri K. Appavoo Pillai.
2 Sri N. V. Chockalingam.
3 Sri B. Doraiswamy Reddiar
4 Sri T. Karia Gounder.
5 Sri A. R. Marimuthu.
6 Sri P. K. Mookiah Thevar.
7 Sri P. M. Munuswami Gounder.
8 Sri C. Muthiah Pillai.
9 Sri N. K. Palanisami.
10 Sri K. Pandiaraj.
11 Sri C. R. Ramaswami.
12 Srimathi Savithri Shanmugam.
13 Sri M. S. Selvarajan.
14 Sri P. Vedamanikkam.

Under rule 164 (1) of the Madras Legislative Assembly Rules, the Hon. Minister for Finance and the Chairman of the committee on Public Accounts shall be Members ex-officio.

Under rule 165, I nominate Sri C. R. Ramaswami as the Chairman of the Committee.

SRI V. S. MANIKKASUNDARAM : Sir, I have given notice of another Motion.

MR. SPEAKER : The matter is over for the present. The hon. Member should have raised it earlier.

## VI.—ADJOURNMENT MOTION *re* : CERTAIN WRIT PETITION FILED IN THE HIGH COURT.

**SRI P. S. CHINNADURAI :** கனம் சபாநாயகர் அவர்களே, நான் ஒரு ஒத்திவைப்புப் பிரேரணை கொடுத்திருக்கிறேன். அது என்ன கதி ஆயிற்று என்று தெரியவில்லை.

**MR. SPEAKER :** இந்த உரிமைப் பிரச்னையில் உள்ள விஷயத்தில் நீங்கள் கொடுத்த ஒத்திவைப்புப் பிரச்னையும் கலந்திருப்பதால் இதைக்கூட நாளைக்கு எடுத்துக்கொள்ளுகிறேன்.

## VII. CALLING ATTENTION TO THE IRREGULARITIES POINTED OUT BY THE MADRAS HIGH COURT IN THE APPOINTMENT OF THE GOVERNMENT PLEADERS.

MR. SPEAKER : I have received notice under Rule 41 of the Assembly Rules from hon. Member Sri Kalyanasundaram calling attention of the Hon. the Chief Minister to a matter of urgent public importance, viz., 'the irregularities pointed out by the Madras High Court in the matter of appointment of the present Government Pleader.' He may speak now. Let the hon. Member be brief.

7th September 1960]

SRI M. KALYANASUNDARAM : கனம் சபாநாயகர் அவர்களே, நான் கொடுத்திருக்கும் பிரேரணை, நம்முடைய சட்டசபை விதிகளின் 41-வது விதியின்படி கொடுத்திருக்கும் பிரேரணை சர்க்கார் வக்கீல் நியமனம் சம்பந்தப்பட்டது ஆகும். திரு. அழகிரிசாமி அவர்கள் சர்க்கார் வக்கீலாக நியமனம் செய்யப் பட்டதில் சில ஒழுங்கீனங்கள் இருப்பதாக உயர்நீதி மன்றம் எடுத்துக்காட்டியிருப்பது மட்டுமல்ல, நடவடிக்கை சம்பந்தப் பட்டமட்டில் நடவடிக்கை ஒழுங்கீனமானது என்பதே என்னுடைய கருத்தும்கூட.

SRI P. S. CHINNADURAI : பாயிண்ட் ஆப் ஆர்டர், ஸார். சர்க்கார் வக்கீல் நியமனம் சம்பந்தமாக உயர்நீதி மன்றம் அளித்த தீர்ப்பை எதிர்த்து அப்பீல் செய்து கொள்வதற்கான ஏற்பாடுகள் நடைபெறுவதாக அறிகிறேன். உயர்நீதி மன்ற விதிகளின்படி, 90 தினங்கள் அப்பீலுக்கான காலமாக பொதுவாக வரையறுக்கப்பட்டிருக்கிறது. அப்படியானால், கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் பேசுவதோ, நீதி அமைச்சர் அவர்கள் இதற்குப் பிரதி கொடுக்கும் அறிக்கையோ sub judice ஆகாதா என்று அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : 1948-ம் ஆண்டில் இதுமாதிரி ஒரு பிரச்னை கிளம்பினபோது அப்பொழுது சபாநாயகராக இருந்த திரு. சிவசண்முகம் பிள்ளை அவர்கள் இந்தத் தீர்ப்பைக் கொடுத்திருக்கிறார்கள். அதாவது—

"The appeal has not begun and until it has begun this matter is not *sub judice*."

அந்தத் தீர்ப்பின்படி, அப்பீல் போடாதிருக்கும் வரை அது *sub judice* ஆகவில்லை. அப்பொழுது சபாநாயகராக இருந்த திரு. சிவசண்முகம் பிள்ளை அவர்கள் தீர்ப்பு கொடுத்திருக்கிறார். ஆகையால்தான் நான் ஆமோதித்தேன்.

SRI P. S. CHINNADURAI : ஒரு விளக்கம் கேட்க விரும்புகிறேன். அப்பீல் போடுவதற்காக நீதிபதியினுடைய தீர்ப்பின் நகல் வேண்டுமென்று ஏற்கனவே விண்ணப்பிக்கப்பட்டிருக்கிறது. அந்த நகல் இல்லாமல் அப்பீல் போடுவது என்பது இயலாது. தயவு செய்து சபாநாயகர் அவர்கள் நன்கு கவனிக்க வேண்டுமென்று நான் வேண்டிக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : A ruling has been given by the Speaker.

MR. SPEAKER : Let us hear him.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, you have given a ruling that as long as the appeal has not been filed, it is not *sub judice*. So, I do not think that the hon. Member can go behind that ruling and say that because an application has been filed for a copy of the judgment, the matter is *sub judice*. That will only amount to questioning your authority and ruling, Sir.

[7th September 1960

SRI P. S. CHINNADURAI : I have no intention of questioning the Speaker's ruling and authority. I only want some clarification.

இந்த அளவுக்குப் பதட்டம் அவருக்கு என் இருக்கவேண்டுமென்று எனக்குப் புரியவில்லை. பதட்டப்படவே வேண்டியதில்லை. ரொம்ப நிதானமாகக் கவனித்துப் பேச வேண்டிய விஷயம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அப்பில் போடப்படவில்லை என்றால், அப்பீல் போடுவதற்கு முன்னால் தீர்ப்பினுடைய நகல் இருந்தால்தானே போட முடியும்? நகலுக்கு விண்ணப்பிக்கப்பட்டிருக்கிறது. அது அவசியமா இல்லையா என்பதைச் சபாநாயகர் அவர்கள் தீர்மானிக்கக்கூடும். இதற்கு முழு அதிகாரம் சபாநாயகருக்கு இருக்கிறது. அப்பீலுக்கான கால வரம்பு இருக்கிறது. அப்பீல் போடுவதற்காக தீர்ப்பின் நகல் விண்ணப்பிக்கப்பட்டிருக்கிறது. இந்த நிலையிலே இதைக் குறித்துப் பேசுவது sub judice ஆகாதா என்று அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : sub judice என்று எனக்கு எப்படித் தெரியும்? 'அப்பீல் செய்யப்பட்டிருக்கிறது; இதைப்பற்றி விவாதம் செய்யக்கூடாது' என்று நோட்டீஸ் அனுப்பினால்தானே எனக்குத் தெரியும். ஒருவர் அப்பீல் போடப்போகிறார் என்பதை வைத்து விவாதம் பண்ண முடியாதே. ஆகையால்தான், எனக்கு முன்பு இருந்த சபாநாயகர் அவர்களின் தீர்ப்பைப் படித்தேன். திரும்பவும் வேண்டுமானால் படிக்கிறேன். 'அப்பீல் தாக்கல் ஆகிறவரைக்கும் பேசலாம். அப்பீல் தாக்கல் ஆன பிறகு பேசக் கூடாது' என்று தீர்ப்பு இருக்கிறது. அதைத்தான் படித்தேன்.

ஒன்று சொல்கிறேன். கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் பேசும்போது அரசியலமைப்பின் 211-வது பிரிவை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். ஜட்ஜினுடைய conduct -ஐ 'டிஸ்கஸ்' பண்ணக்கூடாது. கேஸை விளக்கலாம். அரசியலமைப்பின் 211-வது பிரிவு **affect** ஆகிறதென்றால் அவருடைய கவனத்திற்குக் கொண்டுவருவேன்.

**SRI M. KALYANASUNDARAM :** கவனித்துப் பேசுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : 'Conduct' would mean both in approval as well as in disapproval.

MR. SPEAKER : I shall decide it.

**SRI M. KALYANASUNDARAM :** அது கூட சபாநாயகர் தான் முடிவு கட்ட வேண்டும். நிதி அமைச்சருக்கு அனுகூலமாக அர்த்தம் பண்ண முடியாது.

7th September 1960]

SRI S. NAGARAJA MONIGAR : பாயின்ட் ஆப் இன்பர் மேஷன், சார்.

**MR. SPEAKER :** நீங்கள் இப்பொழுது கேட்கக் கூடாது. நான் இப்போது ஒரு விளக்கம் கொடுக்கவேண்டும். 1949-ம் ஆண்டில் இது போன்ற பிரச்னை ஒன்று வந்தபோது அப்பொழுதிருந்த சபாநாயகர் சொன்னதாவது :

This is a reference from the famous Bradlaugh case—

"The House of Commons is not subject to the control of the courts in the administration of that part of the law which relates to its internal procedure only, and that even if its interpretation of a statute prescribing rights exercisable within its walls is erroneous, the courts have no power to interfere. For such purposes the House can practically change or practically supersede the law."

ஆகையால் இந்த சபைக்கு முழு அதிகாரம் இருக்கிறது. இதை நடத்தவேண்டுமென்றால் நடத்த வேண்டியதுதான். அப்பீல் பண்ணிவிட்டால் பேசலாம்.

**SRI M. KALYANASUNDARAM :** தாங்கள் அது சம்பந்தமாக ரொம்பவும் தெளிவுபடுத்திவிட்டதால் அந்த ஆட்சேபணையைப் பற்றி நான் பேசவேண்டிய அவசியம் இல்லை என்று நினைக்கிறேன்.

இப்பொழுது நான் குறிப்பிட விரும்புவது எல்லாம், உயர் நீதி மன்றத்தினுடைய தீர்ப்பு அல்ல ; சர்க்கார் நடவடிக்கையைப் பற்றித்தான். சர்க்கார் நடவடிக்கையில் இருக்கும் ஒழுங்கீனங்கள் என்ன என்பதைப்பற்றித்தான் என்னுடைய கவலை. உயர்நீதி மன்றத்திற்குக்கூட இத்தகைய சந்தர்ப்பத்தைச் செய்து கொடுத்தது எது என்று பார்ப்போமானால், அது சர்க்காருடைய நடவடிக்கைதான் என்பது என்னுடைய முதல் குற்றச்சாட்டு— சர்க்காரின் மீது தான்.

அந்த நபர் சம்பந்தப்பட்டமட்டில், இதனால் பாதிக்கப்பட்ட அதிகாரி சம்பந்தப்பட்டமட்டில், அவரிடத்திலே எனக்கு அனுதாபம் உண்டு. பத்து வருஷ காலமாக சட்ட இலாகா செக்ரடரியாக இருந்து, இந்தச் சபையின் பல கமிட்டிகளிலே அவர் வந்து கலந்துகொண்டு பங்கெடுத்தவர். எனக்கு நேரடியாக அவருடைய திறமை, ஆற்றல் இவைகளைப்பற்றி நன்றாகத் தெரியும். அவரிடத்திலே எனக்கு அனுதாபம்தான். அப்பேர்ப்பட்ட ஒரு மனிதருடைய எதிர்காலத்தை சர்க்காருடைய ஆர்வ மிகுதியினால் கெடுத்து விட்டார்கள் என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். அவர் நம்முடைய இலாகாவில் நீண்ட காலமாக அதிகாரியாக இருந்தவர். அதே சமயத்தில், ஜுடிஷியல் டிபார்ட்மென்டில் அவருக்கு ப்ரொமோஷன் கிடைத்துக்கொண்டே வருகிறது. அவருடைய பேரெண்ட்

டிபார்ட்மென்ட் ஜுடிஷியல் டிபார்ட்மென்ட். ஜுடிஷியல் டிபார்ட்மென்டிலேயிருந்து நம்முடைய சர்க்கார் இலாகாவுக்கு அவர் இரவலாகத் தரப்பட்டிருந்தார். அங்கேதான் அவருக்கு இருக்கவேண்டிய இடம். 1959-ம் வருஷத்திலே அவரை உயர் நீதி மன்றத்தின் நீதிபதியாக நியமிக்கவேண்டும் என்கின்ற ஆர்வம் அரசாங்கத்திற்கு இருந்திருக்கலாம். இன்றைக்கு இருக்கிற அரசியல் சட்டத்தின் பிரகாரம் யார் உயர் நீதி மன்றத்தின் நீதிபதியாக இருக்கவேண்டுமென்பதுபற்றி முதல் அமைச்சர் அவர்களுக்கு ஆலோசனை கூறுவதற்கு உரிமை உண்டு. உயர் நீதி மன்றத்தின் பிரதம நீதிபதிக்கும் ஆலோசனை கூறுவதற்கு உரிமை உண்டு. அதுதான் முறை. ஸ்ரீ. அழகிரிசுவாமி அவர்களை சென்னை உயர் நீதி மன்றத்தின் நீதிபதியாக நியமிக்க என்னென்ன யோக்கியதாம்சங்கள் உண்டோ அந்த யோக்கியதாம்சங்கள் அவர்களுக்கு இல்லை. யோக்கியதாம்சம் என்றால், தகுதி, திறமையைப்பற்றி அல்ல. முதலாவது ஜுடிஷியல் டிபார்ட்மெண்டில் விசாரணை நடத்தும் நீதிபதியாக ஐந்து வருஷங்கள் இருந்திருக்கவேண்டும் அல்லது வக்கிலாக. தொழிலாற்றக்கூடிய வக்கீலாக அவர் பணி புரிந்திருக்கவேண்டும். இது இரண்டும் இல்லாமல் அவர் நிர்வாக இலாகாவிலே அதிகாரியாகவே இருந்து விட்டார் என்பதுதான் அவருக்கு இருக்கக்கூடிய பிரதிகூலமான ஒரு அம்சம். அதை எப்படி நாம் சமாளிப்பது என்பதிலே நம்முடைய அமைச்சர் அவை சுற்றி வளைத்து அவருக்கு உதவி செய்யவேண்டும் என்ற நோக்கத்தோடு இந்த நியமனத்தைச் செய்திருக்கிறார்கள் என்ற ஒரு குற்றச்சாட்டு அரசாங்கத்தின் பேரில் இருக்கிறது என்பது என்னுடைய அபிப்பிராயம். நான் ஆமோதித்தோ அல்லது எதிர்த்தோ பேசுவதாக அர்த்தமில்லை. இந்த நியமனம் செல்லத்தக்கதல்ல, சரியான அதிகாரத்தோடு அவர் இந்தப் பதவியை வகிக்கவில்லை என்று போடப்பட்டுள்ள மனுவிலே மனுதார் குறிப்பிட்டிருக்கக்கூடிய விஷயங்கள் . . . .

**Mr. SPEAKER** : *41-வது விதியின்படி ஒரு பெரிய 'ஸ்பீச்' பண்ண முடியாது. பாராளுமன்றத்தில் 'ஸ்பீச்சே' பண்ணுவதில்லை. இந்தச் சபையிலே 'ஸ்பீச்' பண்ணலாம் என்ற வழக்கம் இருக்கிறது. 41-வது விதியின்படி சுருக்கமாகப் பேசவேண்டும். நீண்ட பிரசங்கம் செய்யக்கூடாது.*

**Sri M. KALYANASUNDARAM** : *1959-ம் வருஷத்திலே எடுத்த முயற்சி வெற்றி பெறவில்லை என்ற காரணத்தினால், இப்பொழுது 1960-ம் வருஷத்திலே அவரை எப்படி உயர் நீதி மன்றத்திற்குக் கொண்டு வருவது என்று பார்த்தார்கள். அதற்கு முதல்படியாக சர்க்கார் வக்கீல் ஸ்தானம் காலியாக இருந்தது. இதற்கு முன்னாலே நடந்த ஒரு நிகழ்ச்சியையும் கவனிக்க வேண்டும். 1959-ம் வருஷத்திலே அவர் சர்க்கார் இலாகாவிலிருந்து ஸிடி ஸிவில் கோர்ட்டு நீதிபதியாக மாற்றப்பட்டார். அப்படி மாற்றப்பட்டு ஐந்து வருஷ தகுதி அடைவதற்குள்ளேயே அவர் ரிடையர்*

7th September 1960] [Sri M. Kalyanasundaram]

ஆகவேண்டிவரும். ஆகையால் உயர் நீதி மன்றத்திற்குப் போவதற்கு வழி இல்லாமல் போய்விடும். ஆகவே, இதற்கு வழி என்ன என்று கண்டுபிடித்தார்கள் என்று நான் ஊகிக்கவேண்டி யிருக்கிறது. ரிடையர் ஆவதற்கு முன்பே ரிடையர் ஆனபிறகு கூட பாதிக்காமல் எப்படி அவரை உயர் நீதி மன்றத்திற்கு நீதிபதியாக அனுப்புவது என்பதில் அமைச்சர் அவை விசேஷ அக்கறை செலுத்தியிருக்கிறார்கள் என்று நான் கருதுகிறேன். ஸிடி ஸிவில் கோர்ட்டு ஜட்ஜ், ஜில்லா நீதிபதி அந்தஸ்து உடையது. ரிடையர் ஆவதற்கு முன்னதாகவே அந்தப் பதவியிலிருந்து விலகுவதற்கு அவருக்கு வசதி செய்து கொடுத்து, அவருக்காக ரிடையர் ஆனாலும்கூட அவர் ஒரு பொதுக் காரியத்திற்காக, அரசாங்கத்தை முட்டுக் கொடுத்து நிறுத்துவதற்காக பொதுக் காரியத்திற்காக அரசாங்கமே சரிந்துவிடும்போல், இவர் சர்க்கார் வக்கீலாக வராவிட்டால், வேறு யாராவது சர்க்கார் வக்கீலாக வந்தால், சர்க்கார் சார்பிலே இருக்கக்கூடிய அத்தனை வழக்கு களும் சரிந்துவிடும், ஏதோ ஆபத்து ஏற்பட்டுவிடும் என்று அரசாங்கம் பயந்ததோ என்னவோ, வேறு 'ப்ராக்டிஸிங் லாயர்ஸ்' தொழில் செய்யக்கூடிய வக்கீல் இந்தப் பதவியை வகிக்க அருகதை இல்லை என்று நினைத்து, இவரை, தன் பதவியிலிருந்து விலக வைத்து, அவர் தனது பதவியை தியாகம் செய்துவிட்டு பொதுக் கடமையை நிறைவேற்றுவதற்காக வந்திருப்பதற்காகவேண்டி அவருக்கு முழுப் பென்ஷனும் கொடுக்கவேண்டும் என்று சர்க்கார் உத்தரவை மாற்றி இவரை சர்க்கார் வக்கீலாக நியமனம் செய்திருக்கிறார்கள். இது சரியான வழியல்ல, குறுக்கு வழியில் இந்த நியமனத்தை செய்திருக்கிறார்கள் என்று தமிழகத்திலுள்ள வக்கீல்களிடையே சர்க்காருடைய நடத்தையில் அவநம்பிக்கையும், பயமும் ஏற்பட்டிருக்கிறது. இம்மாதிரி தங்களுக்கு வேண்டிய ஒருவரை, தாங்கள் நம்பிக்கை வைத்திருக்கும் ஒருவரை எப்படியும் கொண்டுவரவேண்டும் என்பதற்காக இப்படி தவறான உத்தரவு பிறப்பித்து அல்லது உத்தரவுகளை இஷ்டப்படி மாற்றி நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது. இது சம்பந்தமாக நமது சர்க்கார் செயலைப்பற்றி, சர்க்கார் நடவடிக்கையைப்பற்றி தமிழ் நாட்டிலுள்ள பெரும்பாலான வக்கீல்களிடையே சந்தேகமும், கொந்தளிப்பும் ஏற்பட்டிருக்கிறது. இதனால் நம்முடைய எதிர் காலத்து நீதிபரிபாலனத்திற்கு அபாயம் ஏற்படும் என்பது என்னுடைய அபிப்பிராயம். ஒரு வக்கீலுக்கு சேவை புரியப் போய், அநேகமாக பெரும்பாலான வக்கீல்களின் எதிர்ப்பை சம்பாதித்துக் கொண்டுவிட்டார்கள் என்பது என்னுடைய அபிப்பிராயம். இதனால் பொது நலன் ஏற்பட்டுவிட்டதாக நான் நினைக்கவில்லை. ஏன் இப்படி இவர்களை நியமிக்கவேண்டும், இதற்கு வேறு வழியே இல்லையா, என்பதற்குள்ள சமாதானத்தை இந்தச் சபைக்கு மட்டுமல்ல எல்லோருக்கும் சொல்லக் கடமைப் பட்டிருக்கிறார்கள் சர்க்கார். குறுக்கு வழியிலே போய் எப்படி யாவது திரு. அழகிரிசுவாமி அவர்களை சர்க்கார் வக்கீலாகக் கொண்டு வந்துவிடவேண்டும் என்று கருதி, அதற்கு வேண்டிய

[Sri M. Kalyanasundaram] [7th September 1960

வசதிகளைச் செய்து கொடுக்க வேண்டிய அவசியம் என்ன? இதிலிருந்து ஒரு யூகம் பிறப்பதற்கு இடம் அளிக்கிறது. சமீப காலத்தில் இதற்கு முன்பு திரு. வீராசாமி அவர்கள் உயர் நீதி மன்ற நீதிபதியாக நியமிக்கப்பட்டார்கள். திரு. அழகிரிசுவாமி அவர்கள் ஒரு வருஷம் சர்க்கார் வக்கீலாக இருந்த உடனேயே அடுத்த பரிசிலனையில் இவருடைய பெயரும் உயர் நீதி மன்ற நீதிபதியாக நியமிக்கப் படுவதற்கு அனுப்பப்பட்டு, இவரை உயர் நீதி மன்ற நீதிபதியாகக் கொண்டுவருவதற்கு செய்யப்பட்ட முயற்சி இது. சர்க்கார் வக்கீல் பதவிக்கு வேறு நபர் கிடைக்கவில்லை என்ற காரணம் அல்ல என்கின்ற குற்றச்சாட்டை சாட்டுவதற்கு அரசாங்கத் தினுடைய நடவடிக்கை இடம் அளிக்கிறது என்பது என்னுடைய அபிப்பிராயம். இப்படி தவறான, அவநம்பிக்கை உண்டாகக்கூடிய முறைகளை கையாண்டு அவர்கள் செய்த நன்மை என்ன என்றால், திரு. அழகிரிசுவாமி அவர்கள் சகஜமாக கோர்ட்டில் ஆஜராக முடியாமல் செய்துவிட்டார்கள், அவருக்கு நன்மை செய்யவில்லை. நீதிபரிபாலனத்திற்கும் நன்மை செய்யவில்லை. இது மாதிரி ஒரு நடவடிக்கைக்குக் காரணம் என்ன? இந்த நடவடிக்கைத்தான் சிறிது நேரத்திற்கு முன்பு உயர் நீதி மன்றத்திற்கும், இந்தச் சபைக்கும் இருக்கக்கூடிய உரிமையைப்பற்றி ஏற்பட்ட நிகழ்ச்சிக்குக் காரணமாயிருந்தது. அப்பேர்ப்பட்ட ஒரு சந்தர்ப் பத்தை ஏற்படுத்திக் கொடுத்தது. இதில் குற்றவாளி யாராவது இருந்தால், நம்முடைய அமைச்சர் அவை தான் குற்றவாளி என்பது என்னுடைய அபிப்பிராயம். இந்தச் சபைக்கு இதற்குத் தகுந்த சமாதானம் கொடுக்க சர்க்கார் கடமைப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் கொடுக்கக்கூடிய விவரங்கள் என்னவென்பதைத் தெரிந்து கொள்ளாமல் நான் ஒன்றும் சொல்ல விரும்பவில்லை. குற்றச் சாட்டைச் சொன்னால்தானே சமாதானம் தெரியும். சமாதானம் என்ன என்பதைத் தெரிந்துகொண்ட பிறகு அதன் பேரில் அபிப்பிராயம் சொல்லுவதற்கு பின்னாலே சந்தர்ப்பம் இருக்க வேண்டும். எனக்குக் கிடைத்த விவரங்களைக்கொண்டு—நீதிமன்றத்தின் தீர்ப்பில் கொடுக்கப்பட்டுள்ள விவரங்கள் மட்டு மல்ல—நான் சொல்லுகிறேன். (குறுக்கீடு.) நீதிபதியின் குறிப்பினால் மட்டுமல்ல நான் இந்த விஷயத்தை எடுத்துக்கொள்ள வேண்டுமென்பது. நீதிபதியினுடைய குறிப்பும் எனக்குத் தெரியும். ஐந்து தொழிலாளர்கள் சுட்டுக் கொல்லப்பட்டார்கள் என்றால் வேறுவிதமாக இருக்கும். நீதிபதி அவர்கள் சொல்லியிருக்கக் கூடிய கருத்தும் என்னுடைய கருத்தும் சில உடன்பாடாக இருக்கலாம். இந்தச் சபைக்கு அமைச்சர் அவை பதில் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறார்கள் என்பதைத் தெரிவித்துக்கொண்டு, இதை அமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டுவந்து, அந்த அறிக்கையின்மீது ஒரு விவாதத்திற்கும் ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

7th September 1960]

MR. SPEAKER : Perhaps it would be of interest to know what is in May's Parliamentary Practice under the rulings of House of Lords with regard to the point raised by the hon. Member Sri P. S. Chinnadurai.

Matters awaiting the adjudication of a Court of Law should not be brought forward in debate (except by means of a bill). This rule was observed by Sir Robert Peel and Lord John Russel, both by the wording of the speech from the throne and by their procedure in the House, regarding Mr. O'Connel's case and has been maintained by rulings from the Chair.

The Speaker of the House of Commons has also ruled out of order the discussion of allegations of bribery and corruption at an election before the expiration of the period during which an election petition could be lodged. A matter decided by a Court but open to appeal is not *sub judice* unless notice of appeal has been given. Here we are not aware of the fact that an appeal has been filed. This is an additional point in favour of my ruling.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : With regard to the notice under Rule 41, I am to read the following statement of the Hon. Chief Minister.

Arising out of the appointment of Sri A. Alagiriswami as Government Pleader last June I wish to place the relevant facts of the case for the consideration of the House. In doing so I am departing from the convention that confidential correspondence on matters of this nature, is not usually made public. In as mcuh as the issues have now become controversial it may not any longer be in public interest to claim the usual privilege.

Sri Alagiriswami had been a member of the Madras Judicial Service recruited from the Bar as District Munsiff in December 1941. In 1947 he joined the Madras Secretariat as Private Secretary to the Chief Minister, Sri Omandur Ramaswami Reddiar. In 1948 Sri Alagiriswami was posted to the Law Department of the Madras Secretariat, where he rose by stages to the post of Law Secretary. For over 10 years he was directly responsible for drafting many complicated pieces of legislation which had come up for the consideration of this House. His work and conduct in the Law Department was so good that the Government considered that he would be a suitable choice for the High Court Bench. Accordingly when a vacancy arose in the High Court early in 1959, the Government suggested to the Chief Justice that he might consider the claims of Sri Alagiriswami for the post. The Chief Justice examined the records of Sri Alagiriswami and recommended him for the post of an Additional Judge of the Madras High Court. The Governor concurred with this proposal and the Government recommended his name to the President for appointment as Additional Judge of the Madras High Court. The President, however, did not see his way to accept this recommendation on the ground that Sri Alagiriswami

had not acquired enough practical experience as Judges. Soon after, in May 1959, Sri Alagiriswami reverted to the Judicial Department and was posted as Judge of the Madras City Civil Court. In the normal course the Government might have proposed him again to the High Court if he had acquitted himself well as a Judge and after he had acquired the necessary practical experience of trial work.

His work as Law Secretary had brought him in intimate contact with the Advocate-General who had also formed a high opinion of Sri Alagiriswami's legal attainments. Therefore, when the question of filling up the post of Government Pleader arose early in 1960 and some names from the Bar were under consideration, the Advocate-General advised the Government that from the point of the expeditious despatch of Government work, the best choice would be Sri Alagiriswami. This suggestion did look somewhat unorthodox in view of the prevailing practice that Government Pleader was selected from leading Members of the Bar. There was also the further complication that to be appointed as Government Pleader, Sri Alagiriswami had to resign his post in the Judicial Service and revert to the Bar. Even after considering these aspects in consultation with Sri Alagiriswami, the Advocate-General pressed his earlier advice. The House should note that the work of the Government Pleader is closely connected with that of the Advocate-General and that the Government Pleader is expected to assist the Advocate-General wherever he is called upon to do so. Naturally, it would not be right to appoint as Government Pleader, a person in whom the Advocate-General did not have the necessary measure of confidence. It should also be remembered that in this case the choice of the Advocate-General had fallen on a person whom the Government had already considered suitable for the High Court Bench and therefore they had no occasion to doubt the merits of the choice. It was under these circumstances that the Government appointed Sri Alagiriswami as the Government Pleader in June 1960. I may categorically state that the suggestion that this appointment was made with the intention of improving the prospects of Sri Alagiriswami to the High Court Bench, is totally incorrect.

This decision was one taken by the Government as a whole and not that of any individual Minister. The Ministers concerned with the matter was myself, Sri Bhaktavatsalam, the Home Minister and Sri C. Subramaniam, the Minister in charge of Legal Affairs. Even though some of the discussions with the Advocate-General were conducted by Sri C. Subramaniam, both myself and Sri Bhaktavatsalam were being kept informed of the matter from the beginning. The final decision was taken by me under circumstances explained already, in consultation with the other two colleagues of mine, according to the normal procedure obtaining in the Secretariat. Therefore the ultimate responsibility for

that decision is largely mine, and my other two colleagues can be held answerable only to the extent I had shared that responsibility with them.

It is true that the Government granted Sri Alagiriswami the pension which he had earned on the service rendered by him up to the date of resignation from the Judicial Department. The Pension Rules applicable to him as they stood on that date, did not provide for the sanction of a pension to an officer who resigned prematurely before attaining the age of superannuation But the Pension Rules of the All-India Services did permit a pension to a member of those services who had to resign as a condition of his appointment under a Statutory or other body. The spirit of this rule applied to the present case because Sri Alagiriswami had to resign his post not because he wanted to rest or seek private employment, but just because he was being appointed as Government Pleader. The Pension Rules of the Madras Judicial Service had not provided for such a contingency because such cases had not arisen before. It was only fair and equitable that under the circumstances, Sri Alagiriswami had to resign from the Judicial Service, he should be given the pension which he had earned on his earlier service. This act of the Government is consequential to the earlier decision to appoint him as Government Pleader and I leave it to the judgment of the House how any adverse inference could be drawn therefrom.

It may indeed be argued in the afterlight of event that the Government should have anticipated that the appointment was likely to provoke resentment amongst the Members of the Madras Bar and that it was also liable to be misconstrued by certain sections of the Public as an act of individual preferment and therefore the Government should not have accepted the advice of the Advocate-General. I would like to submit that, even placing the best construction on the line of argument, it would only mean that perhaps two views were possible on the question. It would certainly not mean that the decision taken by the Government lacked good faith. In the matter of the appointment of a particular individual to the post of Government Pleader no major question of State policy is involved. In the day-to-day business of the Government, decisions of this nature have to be taken frequently. The main points to be ensured were that the person selected had the necessary qualifications and that he would fit smoothly into the organization conducting the legal affairs of the Government. Leading Advocates were indeed being appointed to the post in the past, but that did not mean that the Members of the Bar had acquired a prescriptive right to the post and that a person from outside should not be appointed at all, however suitable he might be. I have now explained all the relevant circumstances and I would only plead that the action of the Government should be judged by the House and by Members of the public outside, with understanding and fairplay and in particular without passion and prejudice.

* MR. SPEAKER : This statement read out by the Hon. the Home Minister is the statement of the Hon. Chief Minister.

VIII. GOVERNMENT MOTION.

(1) CHANGE OF NON-OFFICIAL DAY INTO OFFICIAL DAY.

THE HON. SRI C. SUBRAMANIAM : I move the following motion :—

"That Rule 23 of the Madras Assembly Rules be suspended and the House do proceed to transact Official Business on Thursday, the 8th September 1960."

The motion was put and carried.

(2) ASSOCIATION OF COUNCIL MEMBERS WITH THE COMMITTEE ON ESTIMATES OF THE ASSEMBLY.

THE HON. SRI C. SUBRAMANIAM : I move—

"That this House recommends to the Legislative Council that they do nominate five Members of the Council to associate with the Committee on Estimates of this House for the year 1960–61 and communicate to this House the names of the Members so nominated."

The motion was put and carried.

(3) DRAFT OUTLINE OF THE THIRD FIVE-YEAR PLAN—*cont.*

MR. SPEAKER : We shall now continue the discussion on the Third Five-Year Plan.

Regarding the amendments to the main motion hon. Members who have already given notice of amendments may move them now. Amendments given notice of subsequently will be considered tomorrow.

SRI S. M. ANNAMALAI : Sir, I move the following amendments :—

Add the following at the end—

"and on such consideration this House recommends

(i) that Krishna and Godavari system to bring water to this State be added in the Third Five-Year Plan;

(ii) that the construction of a reservoir across Kamandalanathi at Shenbagathope, Polur taluk be added in the Third Five-Year plan; and

(iii) the establishment of a sulphur industry at Thanian Reserve Forest in Polur taluk be added in the Third-Five year Plan."

*Add* the following at the end—

"and on such consideration this House recommends to the Central Government to set up an Atomic Power Station in this State".

The amendments were duly seconded.